AL/2017/28-T-I

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / முழுப் பதிப்புரிமையுடையது /All Rights Reserved]

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka Department of Examinations, Sri Lanka Department of Examinations, Sri Lanka
Department of Examinations, Sri Lanka

කල්විප් පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2017 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2017 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2017

| | | |
|---|---|---|
| ගෘහ ආර්ථික විද්‍යාව I<br>மனைப் பொருளியல் I<br>Home Economics I | 28 T I | පැය දෙකයි<br>இரண்டு மணித்தியாலம்<br>Two hours |

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை எழுதுக.**
* கணிப்பானைப் பயன்படுத்தக் **கூடாது.**
* விடைத்தாளின் பிறபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசிக்க.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என எண்ணிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

1. பின்வரும் கோட்பாடுகளுள் எது மனையினுள் வெவ்வேறு பகுதிகளுக்கு இலகுவாக நடமாடுவதனை குறிப்பிடுகின்றது ?
   (1) கூட்டமைப்பு (2) நிலைமாறுதல் (3) நடமாடல்
   (4) தரப்படுத்தல் (5) நெகிழும் தன்மை

2. மனை நிர்மாணத்தின்போது நிலைக்குத்து கோடுகள் மற்றும் சரிவுக் கோடுகள் மூலமாக வெளிக்காட்டப்படும் இரண்டு உணர்வுகளாவன முறையே
   (1) நிலையான தன்மை, நெகிழும் தன்மை
   (2) உயரமான தன்மை, செயற்படுத் தன்மை
   (3) உயரமான தன்மை, நிலையான தன்மை
   (4) செயற்படுத் தன்மை, சாந்தத் தன்மை
   (5) சாந்தத் தன்மை, நெகிழும் தன்மை

3. மனை அலங்காரம் தொடர்பாக பின்வரும் கூற்றுகளில் சரியானது எது ?
   (1) மலர் ஒழுங்கமைப்பு அலங்காரத்தின்போது இளம் நிற பெரிய மலர்களை மேற்பகுதியிலும் கடும் நிற சிறிய மலர்களைக் கீழ்ப்பகுதியிலும் இடல் வேண்டும்.
   (2) அறையொன்றுக்கு நிறப்பூச்சு பூசும்போது நிற இசைவிலுள்ள எல்லா நிறங்களும் சம அளவில் பயன்படுத்தப்படும்.
   (3) அலங்கார தரைவிரிப்புடன் கூடிய வரவேற்பு அறைக்கு அச்சிடப்பட்ட திரைச்சீலைகள் மிகவும் பொருத்தமானவையாகும்.
   (4) இடவசதி குறைந்த அறைகளில் ஜன்னல்கள் மற்றும் கதவுகள் என்பவற்றுக்கு இளம்நிற திரைச்சீலைகள் பொருத்தமானவையாகும்.
   (5) கடின இழையமைப்பைக் கொண்ட தாழியில் அந்தூரியம் மலர்களைக் கொண்ட மலர் ஒழுங்கமைப்பானது ரெக்சீனினால் போர்த்தப்பட்ட உருக்கு நாற்காலி தொகுதிக்கு பொருத்தமானது.

4. பின்வருவனவற்றுள் 12' x 12' அறையொன்றில் செவ்வக வடிவத்தை தோற்றுவிப்பதற்கு பயன்படுத்தக்கூடிய நடைமுறையொன்றாக அமைவது எது ?
   (1) பாவுக்கு இளம் நிறமொன்றைப் பூசுதல்
   (2) சமாந்தர சுவர்கள் இரண்டிற்கு கடும் நிறமொன்றைப் பூசுதல்
   (3) ஒன்றுக்கொன்று அருகிலுள்ள சுவர்கள் இரண்டிற்கு ஒரே நிறத்தைப் பூசுதல்
   (4) எதிரெதிர் சுவர்கள் இரண்டிற்கு கிறில் உடனான ஜன்னல்களைப் பொருத்துதல்
   (5) கதவுக்காக நிலைக்குத்துக் கோடுகளுடனான திரைச்சீலைகளை இடுதல்

5. நிறம் ஒன்றின் பெறுமானம் தொடர்பாக மாணவரொருவரினானல் கூறப்பட்ட சில விடயங்கள் கீழே தரப்பட்டுள்ளன. இவற்றுள் சரியான விடயம் எது ?
   (1) பெறுமானம் குறையும்போது பொருளொன்றின் அளவு சிறிதாகக் காட்டப்படும்.
   (2) கறுப்பு நிறத்தைச் சேர்ப்பதனால் நிறமொன்றின் பெறுமானம் மாறுபடமாட்டாது.
   (3) சுற்றியுள்ள ஒளிக்கேற்ப நிறமொன்றின் பெறுமானம் மாறுபடும்.
   (4) பெறுமானத்தின் மூலம் நிறமொன்றின் கடும் தன்மை அல்லது இளம் தன்மை வெளிப்படும்.
   (5) நிறச் சக்கரத்தில் எதிர் நிறங்களைக் கலப்பதன் மூலம் பெறுமானம் மாறுபடமாட்டாது.

[பக். 2 ஐப் பார்க்க

Download Past Papers at : www.freebooks.lk

6. பின்வருவனவற்றுள் மனை முகாமைத்துவம் தொடர்பான சரியான கூற்றைத் தெரிவுசெய்க.
   (1) நீர்ச் சுத்திகரிப்பின்போது 100 லீற்றர் நீருக்கு 5 கிராம் அளவு குளோரின் சேர்க்கப்படும்.
   (2) மலக்கூட பேசினை சுத்திகரிப்பதற்கு வலிமையான கிருமிநாசினியைப் பயன்படுத்துவது மிகப் பொருத்தமானதாகும்.
   (3) வீட்டுக் கழிவுகளை எரிக்கும்போது பூரண தகனம் நிகழும்.
   (4) செப்ரிக் தொட்டியில் திண்மக் கழிவுகள் காற்றுவாழ் பற்றீரியாக்களின் செயற்பாடுகள் மூலம் உக்கச் செய்யப்படுகின்றன.
   (5) பொலித்தீன், பிளாஸ்ரிக் ஆகியவற்றை எரிக்கும்போது வெளிவரும் டைஒக்சின் வாயு காரணமாக சூழல் மாசடைகிறது.

7. பின்வருவனவற்றுள் வெள்ளொளிர்வு (இழை) மின்குமிழுடன் தொடர்பான சரியான கூற்று எது ?
   (1) வெள்ளொளியைப் பிறப்பிக்கும்.
   (2) ஆயுட்காலம் அதிகமாகும்.
   (3) மின்குமிழ்களுள் நைதரசன் வாயு மாத்திரம் நிரப்பப்பட்டுள்ளது.
   (4) கூடியளவு வெப்பத்தை வெளிவிடும்.
   (5) குறைந்தளவு மின்சக்தி விரயமாகும்.

8. பின்வருவனவற்றுள் மிக எளிய மூலக்கூற்றுச் சூத்திரத்தையும் கட்டமைப்புச் சூத்திரத்தையும் கொண்ட அமினோ அமிலம் எது ?
   (1) லைசின் (2) கிளைசின் (3) லியூசின்
   (4) அலனின் (5) ஐசோலியூசின்

9. தனி நிரம்பாத கொழுப்பமிலம் அடங்கும் உணவுப்பொருள்
   (1) பட்டர் (2) மீன் (3) இறைச்சி
   (4) ஆனைக்கொய்யா (5) தேங்காய் எண்ணெய்

10. $C_{15}H_{31}COOH$ என்னும் மூலக்கூற்றுச் சூத்திரத்தினால் காட்டப்படும் கொழுப்பமிலம்
   (1) பாமிற்றிக் அமிலம் (2) ஒலேயிக் அமிலம்
   (3) லினோலெயிக் அமிலம் (4) லினோலெனிக் அமிலம்
   (5) அரக்கிடோனிக் அமிலம்

11. பின்வருவனவற்றுள் சிபார்சு செய்யப்பட்ட நாளாந்த போசணைத் தேவை அட்டவணை (2007) தொடர்பாக சரியான கூற்று எது ?
   (1) குழந்தைப் பருவத்தில் இரும்பின் தேவைப்பாடு மாறுபடமாட்டாது.
   (2) கட்டிளமைப் பருவத்தில் ஆண், பெண் பிள்ளைகளின் கல்சியம் தேவைப்பாடுகள் ஒரே அளவினதாகும்.
   (3) கர்ப்ப காலத்தில் சக்தி தேவைப்பாடு மாறுபடமாட்டாது.
   (4) பாலூட்டும் காலத்தில் விற்றமின் A இன் தேவைப்பாடு அதிகரிக்கும்.
   (5) வயோதிப காலத்தில் புரத தேவைப்பாடு குறைவடையும்.

12. பின்வருவனவற்றுள் எது பீலிங் A, B ஆகிய கரைசல்களைச் சேர்த்து வெப்பப்படுத்தும்போது செங்கட்டி சிவப்பு நிற வீழ்ப்படிவைத் தரும்?
   (1) சுக்குரோசு (2) மோல்ற்றோசு (3) குளுக்கோசு
   (4) குளுக்கோசு மற்றும் மோல்ற்றோசு (5) பிரற்றோசு மற்றும் சுக்குரோசு

13. உணவில் அடங்கியிருக்கும் இரும்பு உடலினால் அகத்துறிஞ்சப்படுதலை மிகவும் துரிதப்படுத்தும் காரணிகள் இரண்டு
   (1) பைற்றிக் அமிலம், ஒட்சாலிக் அமிலம் (2) பாமிற்றிக் அமிலம், ஸ்ரியரிக் அமிலம்
   (3) அசற்றிக் அமிலம், லினோலெயிக் அமிலம் (4) போலிக் அமிலம், பென்ரோதெனிக் அமிலம்
   (5) சிற்றிக் அமிலம், அஸ்கோபிக் அமிலம்

14. பின்வருவனவற்றுள் தைரொட்சின் ஓமோன் தொடர்பான **பிழையான** கூற்று எது ?
   (1) தோலின் ஆரோக்கியத்தைப் பேணும்.
   (2) வளர்ச்சி ஓமோனாகும்.
   (3) அடிக்குரிய அனுசேப வீதத்தைக் கட்டுப்படுத்தும்.
   (4) உற்பத்திக்கு அயடீன் அவசியமாகும்.
   (5) முதிர்மூலவுருவின் சரியான வளர்ச்சிக்கு முக்கியமானதாகும்.

15. நுண் கனியங்கள் இரண்டு
   (1) அயடீனும் மகனீசியமும் (2) கல்சியமும் மங்கனீசும்
   (3) செப்பும் சோடியமும் (4) கோபால்ற்றும் பொற்றாசியமும்
   (5) இரும்பும் நாகமும்

[பக். 3 ஐப் பார்க்க

Download Past Papers at : www.freebooks.lk

**16.** விற்றமின் B கூட்டத்திற்குரிய சயனோகோபாலமைன் இனங்காணப்படுவது

(1) விற்றமின் $B_1$ எனவாகும். (2) விற்றமின் $B_2$ எனவாகும்.
(3) விற்றமின் $B_3$ எனவாகும். (4) விற்றமின் $B_6$ எனவாகும்.
(5) விற்றமின் $B_{12}$ எனவாகும்.

**17.** பின்வருவன விற்றமின் வகைகள் பற்றிய சில விடயங்களாகும்.

*A* - ஈரலில் சேமிக்கப்படும்.
*B* - உற்பத்திக்கு கொலஸ்ரோல் அவசியமாகும்.
*C* - கல்சியம் அகத்துறிஞ்சலை அதிகரிக்கும்.
*D* - குருதிக்கு நேரடியாக அகத்துறிஞ்சப்படும்.
*E* - உறுதித் தன்மை குறைந்த விற்றமின் ஆகும்.

இவற்றுள் விற்றமின் D உடன் தொடர்பான விடயங்களாவன

(1) *A*, *B* மற்றும் *C* (2) *A*, *C* மற்றும் *E* (3) *C*, *D* மற்றும் *E* (4) *A* மற்றும் *B* (5) *D* மற்றும் *E*

**18.** காலை உணவுவேளையொன்றில் அடங்கியுள்ள மொத்த சக்தியின் அளவு 550 கிலோ கலோரியாகும். அதில் 15 கிராம் புரதமும் 10 கிராம் கொழுப்பும் அடங்கியுள்ளன. இவ்வுணவு வேளையில் அடங்கியுள்ள காபோவைதரேற்றின் அளவு

(1) 80 கிராம் (2) 90 கிராம் (3) 100 கிராம் (4) 110 கிராம் (5) 120 கிராம்

**19.** பால், சீனி, உருளைக்கிழங்கு ஆகிய உணவுப்பொருள்களில் அடங்கியுள்ள காபோவைதரேற்றுகள் ஆவன முறையே

(1) குளுக்கோசு, பிரற்றோசு, அமைலோ பெக்ரின் (2) லக்ற்றோசு, குளுக்கோசு, பெக்ரின்
(3) அமைலோசு, மோல்ற்றோசு, இனியுலின் (4) லக்ற்றோசு, சுக்குரோசு, மாப்பொருள்
(5) கலற்றோசு, டெக்ஸ்ரின், செலுலோசு

**20.** மீன், முட்டை ஆகியன தொடர்பாக மாணவரொருவரினால் எழுதப்பட்ட குறிப்பில் பின்வரும் விடயங்கள் அடங்கியிருந்தன.

*A* - மீன், ஹீம் இரும்பு அதிகளவு அடங்கியுள்ள உணவாகும்.
*B* - முட்டையில் அல்பியுமின், ஓவொவிட்டலின் ஆகிய புரதங்கள் அடங்கியுள்ளன.
*C* - மீன், விற்றமின் A, C அதிகளவு அடங்கியுள்ள உணவாகும்.
*D* - மீனில் அத்தியாவசிய கொழுப்பமிலங்கள் அடங்கியுள்ளன.
*E* - முட்டை வெண்கருவானது கொழும்பு, விற்றமின் D, E ஆகியவற்றை அதிகளவு கொண்டுள்ளது.

இவற்றுள் சரியான விடயங்களாவன

(1) *A*, *B* மற்றும் *C* (2) *A*, *B* மற்றும் *D* (3) *C*, *D* மற்றும் *E* (4) *A* மற்றும் *E* (5) *B* மற்றும் *D*

**21.** பின்வருவனவற்றுள் 20% அளவிலான புரதத்தைக் கொண்டிருக்கும் உணவுப் பொருட்களாவன

(1) இறைச்சி, கடலை (2) பருப்பு, கோதுமை (3) பால், மீன்
(4) முட்டை, அரிசி (5) சோயா அவரை, சிறகவரை

**22.** பின்வருவன சில உணவுப்பொருள்களுடன் தொடர்பான விடயங்களாகும்.

*A* - லெகுயுமின் என்னும் புரதம் அடங்கியுள்ளது.
*B* - விற்றமின் C யை அதிகளவு கொண்டிருக்கும்.
*C* - உடலுக்கு சக்தியைப் பெற்றுத்தரும்.
*D* - பல் நிரம்பா கொழுப்பமிலங்கள் அடங்கியுள்ளன.
*E* - இரும்பு மற்றும் பீற்றா கரோட்டீன் என்பனவற்றை அதிகளவு கொண்டிருக்கும்.

இவற்றுள் கீரை வகைகளுடன் தொடர்பான விடயங்களாவன

(1) *A* யும் *B* யும் (2) *A* யும் *D* யும் (3) *B* யும் *E* யும் (4) *C* யும் *D* யும் (5) *C* யும் *E* யும்

**23.** குளோரோபில், அந்தோசயனின், பிளவோன் ஆகிய நிறப்பொருள்கள் அதிகமாக அடங்கியுள்ள மரக்கறிகள் முறையே

(1) லீக்ஸ், பாகற்காய், பூசனிக்காய் (2) சாரணை கீரை, வெண்டிக்காய், கோவா
(3) கங்குன், தக்காளி, வெள்ளரிக்காய் (4) பசளி, பீற்றூட், முள்ளங்கி
(5) போஞ்சி, கறிமிளகாய், கத்தரிக்காய்

**24.** பின்வரும் உணவு வேளைகளுள் மிகவும் பொருத்தமான மரக்கறி உணவு வேளை எது ?

(1) சோறு, உருளைக்கிழங்கு கறி, வெண்டிக்காய் வதக்கல், பாகற்காய் பொரியல், வல்லாரைச் சம்பல்
(2) சோறு, வெள்ளரிக்காய் கறி, வாழைக்காய் பொரியல், பொன்னாங்கண்ணி வறை, தக்காளி சலாது
(3) சோறு, பருப்புக் கறி, கத்தரிக்காய் பொரியல், கோவா வதக்கல், பீற்றூட் சலாது
(4) சோறு, பலாக்காய் கறி, பீர்க்கங்காய் கறி, பயற்றங்காய் பொறியல், கொஹில சம்பல்
(5) சோறு, கடலைக் கறி, போஞ்சி வதக்கல், அகத்தி வறை, கரட் சம்பல்

**25.** புண் இலகுவில் ஆறாமை, முரசில் குருதி கசிதல் ஆகிய நோய் அறிகுறிகள் பின்வரும் எந்த விற்றமின் குறைபாட்டினால் ஏற்படும் ?

(1) விற்றமின் A (2) விற்றமின் $B_1$ (3) விற்றமின் $B_2$ (4) விற்றமின் C (5) விற்றமின் E

[பக். 4 ஐப் பார்க்க

Download Past Papers at : www.freebooks.lk

3848

**26.** இரைப்பை அழற்சி (கேஸ்ரைட்டிஸ்) ஏற்படுவதற்கு காரணமான பற்றீரியா
(1) ஸ்ரெப்ரோகொக்கஸ் லெக்ரிஸ் (2) அசற்றோபக்ரர் அசிற்றை
(3) ஹெலிகோபக்ரர் பைலோரா (4) எஸ்செரிசியா கோலி
(5) லெக்ரோபசிலஸ் பல்காரிக்கஸ்

**27.** இதய நோயாளி ஒருவருக்காக திட்டமிடும் உணவு வேளைக்கு சிபாரிசு செய்யப்படும் உணவு வகை
(1) சமன் (2) மாஜரின் (3) தயிர் (4) இறால் (5) கோழி இறைச்சி

**28.** நீரை வெப்பமேற்றி கொழுப்பைச் சேர்த்து அதற்கு மாவை இட்டு கலந்து பின்னர் முட்டைகளைச் சேர்த்து செய்யப்படும் பேஸ்ரி வகை பின்வருவனவற்றுள் எது ?
(1) பப் பேஸ்ரி (2) பெடி பேஸ்ரி (3) சோர்ட்கிரஸ்ட் பேஸ்ரி (4) சூ பேஸ்ரி (5) பிளேகி பேஸ்ரி

**29.** மந்த போசணை நிலைமை மிகவும் அதிகமாக காணப்படுவது
(1) குழந்தைகளிடையேயாகும். (2) முன்பிள்ளைப் பருவத்தினரிடையேயாகும்.
(3) கர்ப்பிணி தாய்மார்களிடையேயாகும். (4) பாலூட்டும் தாய்மார்களிடையேயாகும்.
(5) முதியோர்களிடையேயாகும்.

**30.** கட்லற் பொரிக்கும்போது வெப்பம் இடமாற்றப்படுவது
(1) கடத்தல் மூலமாகும். (2) உடன்காவுகை மூலமாகும்.
(3) கடத்தல் மற்றும் உடன்காவுகை மூலமாகும். (4) கடத்தல் மற்றும் கதிர்ப்பு மூலமாகும்.
(5) உடன்காவுகை மற்றும் கதிர்ப்பு மூலமாகும்.

**31.** உணவு நற்காப்பு தொடர்பாக கீழே தரப்பட்டுள்ள கூற்றுகளில் சரியான கூற்று எது ?
(1) அதி குளிரூட்டல் மூலம் உணவில் அடங்கியுள்ள அதிகளவான பற்றீரியாக்கள் அழிவடையும்.
(2) பாச்சராக்கத்தின்போது நோயாக்கி பற்றீரியாக்களும் அதேபோன்று அவற்றின் வித்திகளும் அழிவடையும்.
(3) சிவிறி உலர்த்துதல் மூலம் ஒடுக்கிய பால் உற்பத்தி செய்யப்படும்.
(4) இறைச்சி மற்றும் மீன் வகைகளை நற்காப்பு செய்யும்போது சோடியம் நைத்திரேற்று பயன்படுத்தப்படும்.
(5) அநேகமான மரக்கறிகள் நற்காப்பு செய்யப்படுவதற்கு முன்னர் பிளான்ச் செய்யப்படும்.

**32.** உணவுச் சமிபாட்டுத் தொகுதியின் பின்வரும் எப்பகுதிகளில் முறையே அமைலேசு, பெப்ரிடேசு, ரெனின் ஆகிய நொதியங்கள் மூலம் சமிபாடு நடைபெறும்?
(1) சிறுகுடல், இரைப்பை, முன்சிறுகுடல் (2) வாய், முன்சிறுகுடல், இரைப்பை
(3) சிறுகுடல், வாய், இரைப்பை (4) முன்சிறுகுடல், சிறுகுடல், இரைப்பை
(5) வாய், சிறுகுடல், முன்சிறுகுடல்

**33.** பெருங்குடலில் அகத்துறிஞ்சப்படும் பதார்த்தங்களாவன
(1) அமிலங்களும் வாயுக்களுமாகும். (2) குளுக்கோசும் பிரற்றோசுமாகும்.
(3) கிளிசரோலும் கொழுப்பமிலங்களுமாகும். (4) அமினோ அமிலங்கள் ஆகும்.
(5) கல்சியமும் மகனீசியமும் ஆகும்.

**34.** பின்வருவனவற்றுள் அனுசேப செயன்முறை தொடர்பான **பிழையான** கூற்று எது ?
(1) கொழுப்பு அனுசேபத்தின்போது உருவாகும் மேலதிக கீற்றோன் உடல்கள் குருதியின் அமிலத் தன்மையை அதிகரிக்கும்.
(2) அமைனகற்றலின்போது அமினோ அமிலமொன்றின் அமைனோ கூட்டம் அகற்றப்படும்.
(3) கிளைக்கோஜனை குளுக்கோசாக மாற்றும் எபினெப்ரின் ஓமோன் தைரொட்சைட்டு சுரப்பியினால் உற்பத்தி செய்யப்படும்.
(4) கிளைக்கோ பகுப்பு ஒரு காற்றின்றிய செயன்முறையாகும்.
(5) உடலினுள் சக்தி உற்பத்தி செய்யப்படல் ஓர் அவசேபத்துக்குரிய செயன்முறையாகும்.

**35.** பிள்ளையொன்றின் ஆண், பெண் தன்மையை தீர்மானிக்கும் காரணி
(1) தாயின் இலிங்க நிறமூர்த்தங்களின் வகை
(2) தந்தையின் இலிங்க நிறமூர்த்தங்களின் வகை
(3) தாய் மற்றும் தந்தையின் இலிங்க நிறமூர்த்தங்களின் வகை
(4) தாயின் இலிங்க நிறமூர்த்தங்களின் எண்ணிக்கை
(5) தந்தையின் இலிங்க நிறமூர்த்தங்களின் எண்ணிக்கை

**36.** பின்வருவனவற்றுள் கர்ப்ப காலத்தில் நடைபெறும் செயன்முறை எது ?
(1) சூல்களின் முதிர்வடைதலுக்கு ஒக்சிரோசின் ஓமோன் செயற்படும்.
(2) சூலகத்திலிருந்து ஒரு மாதத்தில் பல முதிர்ந்த சூல்கள் வெளிவிடப்படும்.
(3) சூல்கொள்ளப்பட்டு 48 மணித்தியாலங்களுள் கருக்கட்டல் நிகழும்.
(4) கருக்கட்டலின் பின்னர் மூன்று நாட்களுள் முளையம் கருப்பையில் உட்பதிக்கப்படும்.
(5) கருக்கட்டப்படாத சூல்கள் மாதவிடாய் மூலம் உடலிலிருந்து நீக்கப்படும்.

[பக். 5 ஐப் பார்க்க

Download Past Papers at : www.freebooks.lk

**37.** கர்ப்ப காலத்தில் மூன்றாவது மும்மாதங்களில் முதிர்மூலவுருவின் வளர்ச்சியின் ஓர் இயல்பானது
(1) கை-கால்களில் விரல்களின் வளர்ச்சி ஆரம்பமாகும்.
(2) இதயத் துடிப்பு ஆரம்பமாகும்.
(3) சமிபாட்டு நொதியங்கள் செயற்படும்.
(4) முதிர்மூலவுருவின் அசைவுகள் தொடங்கும்.
(5) கழிவகற்றல் தொகுதி செயற்பாட்டில் இருக்கும்.

**38.** பின்வருவனவற்றுள் குழந்தைப் பராயம் பற்றிய சரியான கூற்று எது ?
(1) பிறந்து ஆரம்ப சில நாட்களில் குழந்தையின் உடல் நிறை குறைவடையும்.
(2) வயது இரண்டு மாதங்களாகும்போது குழந்தை நித்திரையில் சிரிக்கத் தொடங்கும்.
(3) நான்கு மாதங்களில் பொதுவாக குழந்தையின் பாற் பற்கள் வெளிப்படும்.
(4) எட்டு மாதங்களளவில் துணையெதுவுமின்றி நடக்கும் ஆற்றலைக் குழந்தை பெறும்.
(5) ஒன்பது மாதங்களாகும்போது குழந்தையின் நிறை பிறப்பு நிறையின் மூன்று மடங்காகும்.

**39.** பின்வருவனவற்றுள் தேசிய நிர்ப்பீடனமாக்கல் நிகழ்ச்சித்திட்டம் (2007) இற்கேற்ப பிள்ளைக்கு வக்சீன் வழங்கப்படுதல் தொடர்பான சரியான கூற்று எது ?
(1) பிள்ளை பிறந்து நான்கு வாரங்கள் பூர்த்தியானவுடன் BCG வக்சீன் வழங்கப்படுகிறது.
(2) பிள்ளைக்கு இரண்டு மாதம் பூர்த்தியானவுடன் முதலாவது தடவை வழங்கப்படும் ஐவலுவுள்ள வக்சீன் வழங்கப்படும்.
(3) பிள்ளைக்கு ஆறு மாதங்கள் பூர்த்தியானவுடன் JE வக்சீன் வழங்கப்படும்.
(4) பிள்ளைக்கு பன்னிரெண்டு மாதங்கள் பூர்த்தியானவுடன் வாய்மூல போலியோ நான்காவது தடவை வழங்கப்படும்.
(5) பிள்ளைக்கு மூன்று வயது பூர்த்தியானவுடன் DT வக்சீன் வழங்கப்படும்.

**40.** நான்கு வயது பிள்ளையின் நுண் தசை விருத்திக்கு மிக உகந்த இரண்டு செயற்பாடுகள்
(1) சித்திரங்களை வரைதல் மற்றும் இயங்கும் விளையாட்டு வாகனங்களுடன் விளையாடுதல்
(2) கொலாஜ் நிர்மாண வேலைகளில் ஈடுபடல் மற்றும் காற்றடைக்கப்பட்ட சக்கரத்தை உருட்டுதல்
(3) கத்தரிக்கோலால் வடிவங்களை வெட்டுதல் மற்றும் புள்ளிக்கோடுகளை இணைத்தல்
(4) மத்தளம் கொட்டுதல் மற்றும் செயற்கை களியினால் வனைதல்
(5) படமொன்றை நிறந்தீட்டுதல் மற்றும் பந்தொன்றை வீசுதல்

**41.** சமூக வாழ்வின்போது பின்பிள்ளைப் பருவப் பிள்ளையில் காணக்கூடிய பாதகமான நடத்தைக் கோலம்
(1) சுயமதிப்பு (2) போலச் செய்தல் (3) தன்முனைப்பு
(4) போட்டித் தன்மை (5) இணங்கும் தன்மை

**42.** பின்பிள்ளைப் பருவப் பிள்ளை விருத்தியின் குணப்பண்புகள் தொடர்பான **பிழையான** கூற்றைத் தெரிவுசெய்க.
(1) கருத்துகளை தெளிவாக முன்வைப்பதற்கான ஆற்றலைக் கொண்டிருப்பர்.
(2) கற்றலின்போது முயன்று தவறுதல் முறையைப் பயன்படுத்துவர்.
(3) சமூகமயமாகிய நடத்தைக் கோலங்களைக் காட்டுவர்.
(4) மனவெழுச்சி வெளிப்பாடுகளைக் கட்டுப்படுத்த முயற்சிப்பர்.
(5) சட்டதிட்டங்களுக்குக் கீழ்ப்படிவதற்கும் ஒழுக்க விழுமியங்களை மதிப்பதற்கும் முயற்சிப்பர்.

**43.**


*A*


*B*


*C*


*D*

மேற்படி வரிப்படங்களில் பாய் நெசவு மற்றும் ஒழுங்கான சரிவுக்கோட்டு நெசவு ஆகியவற்றைக் காட்டுவது முறையே
(1) *A* யும் *B* யும் (2) *A* யும் *C* யும் (3) *B* யும் *C* யும்
(4) *B* யும் *D* யும் (5) *C* யும் *D* யும்

**44.** திறந்த பொருத்தொன்றின் தைக்கா விளிம்பினை நேர்த்தியாக்கும் இரண்டு விதங்கள்
(1) கம்பளித்தையலைப் பயன்படுத்தலும் சிறுநூலோடித் தைத்தலும்
(2) விசுப்பத்தையலைப் பயன்படுத்தலும் பெருநூலோடித் தைத்தலும்
(3) பெருநூலோடித் தைத்தலும் ஓவர்லொக்கிங் செய்தலும்
(4) சிறுநூலோடித் தைத்தலும் விசுப்பத்தையலைப் பயன்படுத்தலும்
(5) ஓவர்லொக்கிங் செய்தலும் கம்பளித்தையலைப் பயன்படுத்தலும்.

[பக். 6 ஐப் பார்க்க

Download Past Papers at : www.freebooks.lk

**45.**






1 (a) 1 (b) 2 (a) 2 (b)

1 (a), 1 (b) மற்றும் 2 (a), 2 (b) ஆகியவற்றினால் இரண்டு வகை நார்களின் நுணுக்குக்காட்டியின் கீழான நீள்பக்கத் தோற்றமும் குறுக்குப்பக்கத் தோற்றமும் காட்டப்படுகின்றன. இவ்விரு நார்களும் முறையே

(1) பருத்தியும் நைலோனும் ஆகும்.
(2) பட்டும் ரெயோனும் ஆகும்.
(3) கம்பளியும் பருத்தியும் ஆகும்.
(4) நைலோனும் ரெயோனும் ஆகும்.
(5) கம்பளியும் பட்டும் ஆகும்.

**46.** மாணவரொருவரின் குறிப்புப் புத்தகத்தில் காணப்பட்ட சில கூற்றுகள் கீழே தரப்பட்டுள்ளன.

*A* - சூரிய ஒளியில் உள்ள கழியூதாக் கதிர்கள் பட்டுத்துணியின் மீது விழுவதனால் அதன் நார்களுக்குப் பாதிப்பு ஏற்படாது.

*B* - அலங்காரத் திணிப்பு வேலை செய்யும்போது அலங்காரத்தின் கோடுகளைத் தைப்பதற்கு சிறுநூலோடுதல் பயன்படுத்தப்படும்.

*C* - ரெயோன் நார்களை எரிக்கும்போது தலைமயிர் எரியும் மணத்தைத் தோற்றுவிக்கும்.

*D* - துணியொன்றை மூலைவிட்டம் வழியே இழுப்பதன் மூலம் அதன் கோணலை அகற்ற முடியும்.

*E* - சேர்ட்டின் மாதிரியுருவை நிர்மாணிக்கும்போது மார்பளவைக் கணித்து அதன்பின்னர் இளக்க இடைவெளி (ease allowance) சேர்க்கப்படும்.

இவற்றுள் சரியான கூற்றுகள்

(1) *A* யும் *B* யும்
(2) *B* யும் *D* யும்
(3) *C* யும் *D* யும்
(4) *A* யும் *C* யும் *E* யும்
(5) *B* யும் *D* யும் *E* யும்

**47.** நெய்யப்பட்ட துணிகளில் சுருக்கத்தை நீக்குவதற்கு கொடுக்கப்படும் நேர்த்தி

(1) உருளையில் அழுத்துதல்
(2) மினுக்குதல்
(3) சுருங்காமற் செய்தல்
(4) வெளிற்றுதல்
(5) இழுத்து நேர்த்தியாக்கல்

**48.** சேலை ரவுக்கையின் மாதிரியுருவை துணிக்கு இடமாற்றும்போது தேவையான பொருள்களும் கருவிகளும் ஆவன

(1) அளவுநாடா, தையற்காரன் சோக்கு (Tailor's chalk), சுவடுவரைசில்லு
(2) சுவடுவரைசில்லு, காபன் தாள், குண்டூசிகள்
(3) குண்டூசிகள், தையற்காரன் சோக்கு, சுவடுவரைசில்லு
(4) காபன் தாள், அளவுநாடா, குண்டூசிகள்
(5) தையற்காரன் சோக்கு, காபன் தாள், அளவுநாடா

**49.** புடைவைகளைப் பராமரிப்பது தொடர்பாக மாணவர்களால் முன்வைக்கப்பட்ட சில கூற்றுகள் கீழே தரப்பட்டுள்ளன. இவற்றுள் சரியான கூற்றைத் தெரிவுசெய்க.

(1) துணிகளைக் கழுவுவதற்குப் பயன்படுத்தப்படும் சவர்க்காரங்களில் காரத்தன்மை அதிகளவு அடங்கியிருப்பதால் துணிகளிலுள்ள அழுக்குகளை இலகுவாக அகற்ற முடியும்.
(2) கல்சியம், மகனீசியம் ஆகியவற்றின் காபனேற்றுகள் நீரின் நிலையான வன்மைக்குக் காரணமாகும்.
(3) கறைகளை நீக்குவதற்குப் பயன்படுத்தப்படும் வெளிற்றும் தூள் ஓர் ஒட்சியேற்ற வெளிற்றியாவதோடு ஜவல் நீர் ஒரு தாழ்த்தல் வெளிற்றி ஆகும்.
(4) துணிகளைக் கழுவுதால் ஒன்றுசேரும் சவர்க்காரம் நீரின் மேற்பரப்பு இழுவிசையை அதிகரிக்கும்.
(5) ஸ்ரியரிக் அமிலத்துடன் எரிசோடா தாக்கம்புரிந்து சவர்க்காரம் மற்றும் கிளிசரோல் உருவாகும்.

**50.** ஆடையொன்றின் பராமரிப்பு தொடர்பான லேபலொன்றில் 'வெளிற்றிகள் பயன்படுத்தக்கூடாது' மற்றும் 'சமதரையான மேற்பரப்பின் மீது உலர்த்துதல் வேண்டும்' ஆகியவற்றைக் காட்டுவதற்கு இருக்க வேண்டிய குறியீடுகளை முறையே காட்டும் விடையைத் தெரிவுசெய்க.

(1) 

(2) 

(3) 

(4) 

(5) 

***

Download Past Papers at : www.freebooks.lk

AL/2017/28/T-II

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / முழுப் பதிப்புரிமையுடையது / All Rights Reserved]

இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka Department of Examinations, Sri Lanka Department of Examinations, Sri Lanka
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2017 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2017 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2017

ගෘහ ආර්ථික විද්‍යාව II
மனைப் பொருளியல் II
Home Economics II

28 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

**அறிவுறுத்தல்கள்:**

* பகுதி **I** இல் **1** ஆம் வினா உட்பட **மூன்று** வினாக்களுக்கும் பகுதி **II** இல் **5** ஆம் வினா உட்பட **நான்கு** வினாக்களுக்கும் விடை எழுதுக.

## பகுதி I

(**1** ஆம் வினாவும் வேறு **இரண்டு** வினாக்களும் உட்பட **மூன்று** வினாக்களுக்கு விடை எழுதுக.)

**1.** 'மனை' கண்காட்சி மிகவும் வெற்றிகரமாக அமைந்தது என அதன் ஒழுங்கமைப்பாளர்கள் கூறினர். மனைத் திட்டமிடலிலிருந்து மனை அலங்கரிப்பு வரையில் பின்பற்ற வேண்டிய அனைத்து படிமுறைகள் தொடர்பாகவும் அங்கு விளக்கம் பெறுவதற்கு பார்வையாளர்களுக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. மனை மாதிரிகளுடன் மனை நிர்மாணிப்புகளின் போது பயன்படுத்தப்படும் பல்வேறு கட்டுமான பொருட்களின் மாதிரிகளும் காட்சிப்படுத்தப்பட்டிருந்தன. கண்காட்சியில் மனைத்துணியணிகளும் துணையணிகளும் கவர்ச்சிகரமான முறையில் வைக்கப்பட்டிருந்தன.

(i) மனை நிர்மாணிப்புகளின் போது பயன்படுத்தப்படும் கட்டுமான பொருட்கள் **மூன்றைக்** குறிப்பிட்டு அவ்வொவ்வொன்றினதும் **இரண்டு** அனுகூலங்களையும் **இரண்டு** பிரதிகூலங்களையும் எழுதுக.

(ii) 'எதிர்ப்பு' மற்றும் 'கதிர்ப்பு' என்பன மனை மாதிரிகளின் அலங்கரிப்பின் போது சந்தம் பிரயோகிக்கப்பட்ட இரு வழிமுறைகள் ஆகும்.

(*a*) 'எதிர்ப்பு' மற்றும் 'கதிர்ப்பு' என்பவற்றை இனங்காண்க.

(*b*) மனை மாதிரிகளில் 'எதிர்ப்பு' மற்றும் 'கதிர்ப்பு' என்பன பிரதிபலிக்கப்படும் இடங்கள் ஒவ்வொன்றை ஒவ்வொரு வரிப்படம் மூலம் காட்டுக.

(iii) குறிப்பு எழுதுக.

(*a*) மனையில் பல்வேறு இடங்களுக்கான துணையணிகளைத் தெரிவுசெய்தல்

(*b*) அந்தரங்கத் தன்மையைப் பேணும் வகையில் மனையைத் திட்டமிடல்

(iv) அலங்கார மேசை விரிப்புகளும் கண்காட்சியில் காட்சிப்படுத்தப்பட்டிருந்தன. மேசை விரிப்பொன்றை

(*a*) தைப்பதற்கு அவசியமான பொருட்களைத் தெரிவு செய்யும் போது

(*b*) நிர்மாணிக்கும் போது

கருத்திற்கொள்ள வேண்டிய விடயங்களை முன்வைக்குக.

(v) குழந்தைகளின் அறைகளின் அலங்காரம் மற்றும் குழந்தைகளின் தளபாடத் தொகுதிகள் தொடர்பான வீடியோ காட்சி ஒளிபரப்பப்பட்டது. குழந்தைகளின் கட்டில் விரிப்பொன்றை நிர்மாணிப்பதற்கு அவசியமான முன்திட்டமிடலொன்றைக் கட்டியெழுப்புக.

**2.** (i) (*a*) விலங்கு நார்களின் பௌதிக இயல்புகளைக் குறிப்பிடுக.

(*b*) பருத்தி நார்களை இனங்காண்பதற்கான எளிய சோதனைகளை விளக்குக.

(ii) நெய்யப்பட்ட துணிகளைப் போன்றே நெய்யப்படாத துணிகளும் சந்தையில் உள்ளன. நெய்யப்படாத துணிகளை உற்பத்தி செய்யும் **இரு** முறைகளைக் குறிப்பிட்டு அதில் **ஒன்றைப்** பற்றி விவரிக்குக.

(iii) துணிகளைப் பராமரித்தலுடன் தொடர்புடைய உலர் சலவை செயன்முறையை விளக்குக.

(iv) ஆண்களின் சேர்ட் கழுத்துப்பட்டிகையை (Collar) நிர்மாணிக்கும் முறையை வரிப்படங்களின் துணையுடன் காட்டுக.

[பக். 2 ஐப் பார்க்க

Download Past Papers at : www.freebooks.lk

3.




(i) (*a*) மேற்படி தளத் திட்டத்தில் காட்டப்பட்டுள்ள அறையானது சாப்பாட்டு அறையுடன் கூடிய சமையலறையாகப் பயன்படுத்தப்படுகிறது. இவ்வறையினுள் தேவையான வீட்டுத் தளபாடங்களை இடப்படுத்தும் முறையைக் காட்டுக.

(*b*) பிரிஸ்சிலா, கொடேஜ் மற்றும் ரியர் ஆகியன திரைச்சீலைகள் இடப்படும் முறைகளில் மூன்று ஆகும். இம்முறைகளுள் மேற்கூறப்பட்ட அறையின் ஜன்னலுக்கு பொருத்தமான **இரு** முறைகளைப் பெயரிடப்பட்ட வரிப்படங்களின் துணையுடன் காட்டுக.

(ii) இவ்வறையில் சமையலறைக்கான வேலை அலகொன்றை நிர்மாணிக்கும் போது கருத்திற்கொள்ள வேண்டிய விடயங்களை விளக்குக.

(iii) (*a*) 'பிரிந்தநிரப்பு நிற இசைவு' என்பதை இனங்காண்க. இதற்கு உதாரணமொன்றைத் தருக.

(*b*) மேலே குறிப்பிடப்பட்டுள்ள நிற இசைவைப் பயன்படுத்தி இவ்வறையை அலங்கரிக்கும் முறையை விவரிக்குக.

4. (i) வீட்டுத் தோட்டத்தின் அழகினை மேம்படுத்தி காட்டுவதற்கு அதனை எவ்வாறு திட்டமிடவேண்டும் என்பதை விளக்குக.

(ii) சோறு சமைக்கும் அடுப்பின்

(*a*) தொழிற்பாடு

(*b*) பயன்பாடு

(*c*) பராமரிப்பு

ஆகியவற்றை விவரிக்குக.

(iii) சேலை ரவிக்கையொன்றின் மாதிரியுருவை அமைக்கும் போது அடிப்படை மாதிரியுருவில் முதுகு வேல்மடிப்பை அகற்றும் முறையை வரிப்படத்தின் துணையுடன் காட்டுக.

(iv) விளக்குக.

(*a*) மீன்முள்ளுத் தையலை / லெய்சி டெய்சி தையலைப் பயன்படுத்தி ஆடைகளை அலங்கரித்தல்

(*b*) தட்டைப் பொருத்து

## பகுதி II

(**5**ஆம் வினாவும் வேறு **மூன்று** வினாக்களும் உட்பட **நான்கு** வினாக்களுக்கு விடை எழுதுக.)

5. கட்டிளமைப் பருவ பிள்ளைகள் தொடர்பாக நடாத்தப்பட்ட ஆய்வொன்றில் வெளிப்படுத்தப்பட்ட சில விடயங்கள் கீழே தரப்பட்டுள்ளன.

- கட்டிளமைப்பருவ பிள்ளைகளிடம் போஷணை ஒழுங்கீனப் போக்கினைக் காணக்கூடியதாக உள்ளது.
- சில கட்டிளமைப்பருவ பிள்ளைகள் நடத்தைசார் பிரச்சினைகளை வெளிகாட்டுவர்.
- பாடசாலையிலிருந்து விலகிச் செல்லும் கட்டிளமைப்பருவ பிள்ளைகளுக்கு முறையான தொழில் வழிகாட்டல் சேவைகளை வழங்குதல் அவசியமாகும்.

(i) கட்டிளமைப்பருவ பிள்ளைகளின் போஷணைத் தேவைப்பாடுகள் **மூன்றினைப்** பெயரிட்டு அவ்வொவ்வொரு தேவைப்பாடும் கட்டிளமைப் பருவத்தினருக்கு அவசியமாகும் விதத்தை விளக்குக.

(ii) கட்டிளமைப்பருவ பிள்ளைகளிடம் சிறந்த போஷணை நிலைமையை உருவாக்குவதில் தடையை ஏற்படுத்தும் காரணிகள் பற்றி ஆராய்க.

[பக். 3 ஐப் பார்க்க

Download Past Papers at : www.freebooks.lk

(iii) கட்டிளமைப்பருவ பிள்ளைகளிடையே விருப்புக்குரிய உணவான 'மீன் பண்' இனை வீட்டில் தயாரித்துக் கொள்வதற்கு பின்பற்றும் படிமுறைகளை விளக்குக.

(iv) கட்டிளமைப்பருவ பிள்ளைகளிடையே ஏற்படக்கூடிய நடத்தைசார் பிரச்சினைகள் **நான்கினை** முன்வைக்குக.

(v) கட்டிளமைப்பருவ பிள்ளைகள் எதிர்காலத்திற்கு வெற்றிகரமாக முகங்கொடுப்பதில் தொழில் வழிகாட்டல் சேவைகள் எவ்வாறு முக்கியத்துவம் பெறுகின்றன என்பதைக் கலந்துரையாடுக.

**6.** (i) விளக்குக.

(*a*) எடை குறைவான பிள்ளைகளின் பிறப்பு

(*b*) கர்ப்பகாலத்தில் நிறை அதிகரித்தல்

(ii) விவரிக்குக.

(*a*) தாய் சேய் பிணியாய் நிலையத்தில் மேற்கொள்ளப்படும் அளவீடுகளும் சோதனைகளும்

(*b*) கர்ப்பகாலத்தில் இரும்பை மிகைநிரப்பல்

(iii) முன்பிள்ளைப்பருவத்தினரிடையே நற்பழக்கவழக்கங்களை பழக்குவதில் பெற்றோரின் பங்களிப்பை விமர்சிக்குக.

(iv) முன்பிள்ளைப்பருவ அபிவிருத்தி நிலையத்தில் 'வெளிக்களச் செயற்பாடுகளும் வெளிக்கள விளையாட்டுகளும்' திட்டமிடப்படுதல் அவசியமானதாகும். இவற்றினால் பிள்ளைகளுக்குக் கிடைக்கும் நன்மைகளை விளக்குக.

**7.** சீரற்ற வாழ்க்கைக் கோலம் இலங்கையில் தொற்றா நோய்கள் ஏற்படுவதில் கூடியளவு தாக்கம் செலுத்துகிறது.

(i) "சீரற்ற வாழ்க்கைக் கோலம்" என்பதால் கருதப்படுவது யாது?

(ii) மலச்சிக்கல் ஏற்படுவதற்கு ஏதுவான விடயங்கள் **நான்கைக்** குறிப்பிடுக.

(iii) அதிக உடற்பருமனைக் கொண்டிருத்தலானது பல்வேறு நோய் நிலைமைகள் ஏற்படும் வாய்ப்பை அதிகரிக்கும். அவ்வாறான **இரண்டு** நோய் நிலைமைகளை ஏற்படுத்துவதில் அதிக உடற்பருமன் எவ்வாறு தாக்கம் செலுத்தும் என விளக்குக.

(iv) மேலே (iii) இல் நீங்கள் குறிப்பட்ட ஒரு நோய் நிலைமையினால் பாதிக்கப்பட்டுள்ள ஒருவரின் உணவுக்கோலத்தில் செய்யப்பட வேண்டிய மாற்றங்கள் பற்றி கலந்துரையாடுக.

**8.** (i) 'போஷணைப் பிரச்சினைகள்' என்பதை வரைவிலக்கணப்படுத்துக.

(ii) நொதித்தலுக்குட்பட்ட உணவுகளை உட்கொள்வதால் கிடைக்கும் நன்மைகளைக் குறிப்பிடுக.

(iii) விற்றமின் A இனால் உடலுக்கு ஆற்றப்படும் தொழிற்பாடுகள் **நான்கினை** விவரிக்குக.

(iv) கல்சியம் குறைபாடானது வாழ்க்கைச் சக்கரத்தில் பல்வேறு பருவங்களில் ஏற்படக்கூடும். 0 - 5 வயது பிள்ளைகளிடையே காணப்படக்கூடிய கல்சியம் குறைபாட்டு நோயின் அறிகுறிகளை விளக்குக.

**9.** (i) உணவு உட்கொள்ளும் போது பின்பற்றவேண்டிய மேசை பழக்கவழக்கங்கள் / மேசை ஆசாரங்கள் **நான்கைக்** குறிப்பிடுக.

(ii) (*a*) உணவு நற்காப்பின் போது பயன்படுத்தப்படும் பல்வேறு 'காரணிகள்' **மூன்றினைப்** பெயரிடுக.

(*b*) மேலே (ii) (*a*) இல் நீங்கள் குறிப்பிட்ட ஒவ்வொரு காரணியையும் பயன்படுத்தி தயாரிக்கப்படும் நற்காப்பு செய்யப்பட்ட உணவுகள் ஒவ்வொன்று வீதம் தருக.

(*c*) இவ்வுணவுகளின் நற்காப்பில் அவ்வொவ்வொரு காரணியும் எவ்வாறு பங்களிப்புச் செய்யும் எனக் கலந்துரையாடுக.

(iii) பின்பிள்ளைப் பருவத்தினரின் அறிவாற்றல் விருத்திக்காக எடுக்கக்கூடிய நடைமுறைகளை விளக்குக.

(iv) 'இணையத்தளத்திலுள்ள தரவுகளை தகாத வழியில் கையாளுவதால் கட்டிளமைப்பருவ பிள்ளைகள் தவறான வழியில் சென்ற சந்தர்ப்பங்கள் உள்ளன.' கலந்துரையாடுக.

* * *

Download Past Papers at : www.freebooks.lk

